
67
திருநெல்லை
ஆன்மீகத் திங்களிதழ்
ஹேவிளம்பி – தை – 2018 – ஜனவரி
பொங்கல் விழாவை முன்னிட்டு நடைபெற்ற
கோலப்போட்டியில் கலந்து கொண்ட
தொடக்கப்பள்ளி மற்றும் மேல்நிலைப்பள்ளி
மாணவச்செல்வங்கள்
சிவ சிவ
POLYTECHNIC COLLEGE

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி – தை – 2018 – ஜனவரி இதழ் – 67

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்".
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

புயல்சுமந்த மேகமெனப் பொலிகின்ற குழலாளே
பூங்கமல வாவிபுடை சூழ்ந்த தாகிப்
பொலிகின்ற சமிவனத்தின் பொன்மயிலே அம்பலத்தான்
பொதுமன்றில் வாழுசிவ காம வல்லி
தயவுடையார் எவரெனினும் தாங்குபவள் நீயலவோ
தனிப்பெரிய மலைமகளே நெல்லை மாதே
தனக்குவமை இல்லாத தையலென விளங்கிடுவாய்
தகுதிசால் இறைவனுக்குத் தார மானாய்
கயமுகனின் தாயானாய் பாற்கடலான் தங்கையானாய்
கைவாளை மறைத்தான்மேல் காத லானாய்
காம்பரிந்த மலர்த்தோளாய் கற்புடைய மாதரசி
கயிலைவாழ் மலைமகளே காக் கும் தேவி
மயர்வகல மதிவளர மதிசூடி மகிழ்மயிலே
மனதுவைத்துக் காப்பாற்று மானே தெய்வ
மாமயிலே உன்னடிகள் தலைவைத்தோம் அருளென்னும்
மழைபொழிவாய் அம்புயமே அழகே வாழி !

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

நித்திய அநித்தியங்கள் நிண்ணயம்தெரி விவேகம்
மத்திய இகபரங்கள் வருபோகங்களில் நிராசை
சத்தியம் உரைக்க வேண்டும் சமாதி என்று ஆறுகூட்டம்
முத்தியை விரும்பும் இச்சை மொழிவர் சாதனம் இந்நான்கே.

எத்தொழில் செய்வதற்கும் எக்கல்வி கற்பதற்கும் ஒரு தகுதி வரையறுக்கப் பட்டுள்ளது அல்லவா? முது நிலைப் பட்டப்படிப்பிற்கு இளங் கலைப் பட்டப்படிப்பு அவசியம் அல்லவா? அதனைப் போல வேதாந்தம் கற்பதற்கும் பயில்வதற்கும் தகுதிகள் நிர்ணயிக்கப் பட்டுள்ளன. அடிப்படைத் தகுதி ஆன்மீகத்தில் ஆழ்ந்த ஈடுபாடு. அதன் பின்னர் நான்கு தகுதிகள் கூறப்பட்டுள்ளன.

மேலே உள்ள பாடல் கோவிலூர் வேதாந்தப் பாடத்திட்டத்தின் மிகமிக முக்கியமான நூலில் உள்ளது. கைவல்ய நவநீதம் எனும் நூல் உலகளாவிய புகழ் கொண்டது. பல மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டுள்ள நூல் கைவல்ய நவநீதம். இதனை இயற்றியவர் தாண்டவராய சுவாமிகள். தத்துவராயரும், தாண்டவராயரும் முக்கிய குருமார்களாகக் கருதப்படுபவர்கள்.

கோவிலூர்த் திருமடத்தில் யாராவது வேதாந்தம் கற்க விரும்பி வந்தால் எந்த விதமான தகுதித் தேர்வும் செய்வது இல்லை. எவரும் நன்னடத்தை உள்ளவராக ஆன்மீகப் பற்றுக் கொண்டவராக இருந்தால் போதும். எழுதப் படிக்கத் தெரியாதவர்கள், பக்குவப் படுத்திப் பின்னர் வேதாந்த நூல்களை ஒன்றன் பின் ஒன்றாக மனப் பாடம் செய்து பின்னரே பாடம் நடத்துவார்களாம்.

அப்படிப் படிக்கிற மாணவர்கட்கு வேண்டிய தகுதியை உருவாக்கிப் பின்னர் ஞானம் போதித்து ஆயிரக்கணக்கான வேதாந்திகளை உருவாக்கி உள்ளது நம் திருமடம்.

**முதல் தகுதியாகக் கூறப்படுவது - விவேகம் :**

நல்லது - கெட்டது, நன்மை - தீமை, சத்தியம் - பொய், நிரந்தரம் - தற்காலிகம் எனப் பொருத்தித் தெரிந்து கொள்ளும் அடிப்படை அறிவு மேலே கற்கக்கற்க இந்தப் பிரபஞ்சம் நிரந்தரம் இல்லாதது. மாயையின் செயலால் படைக்கப்பட்டது. அழியக்கூடியது இதில் உள்ள உயிர்கள் மற்றும் பொருள்கள் அனைத்தும் அழியக்கூடியவையே. மகாப்பிரளயம் வரும் காலத்துப் பிரபஞ்சம் அனைத்தும் அண்டங்கள் அனைத்தும் அழிந்துவிடும். அழியாச் சக்தியாய் உள்ள ஒரே பொருள் பரம்பொருளே - பிரம்மம் மட்டுமே என்று தெரிந்து கொள்வது விவேகம் எனப்படும்.

**அடுத்த தகுதி - வைராக்யம்**

திடமான நம்பிக்கை எதற்கும் அசையாத திடமான ஞானம். இம்மை மறுமைகளில் எதன் மீதும் ஆசையில்லாமை. விருப்பு வெறுப்புகள் அற்ற திடமான அறிவு. எந்த அனுபவிக்கப்படக்கூடிய பொருள் மீதும் பற்றின்மை ஆகியவை வைராக்யம் எனப்படும்.

**மூன்றாவது சமாதி சட்சம்பத்து :**

நிலைத்த அறிவை ஞானத்தைப் பெற ஆறு வழிமுறைகளின் தொகுப்பு. அந்த ஆறு மார்க்கங்கள் ஆவன.

சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை ஆகிய ஆறாகும்.

**சமம் :** என்பது - அந்தக்கரணங்கள் செயல்பாடுகளை விட்டொழித்துப் புறந்தள்ளி வைத்தல் (அகக் காரணங்கள் : அந்தக் கரணங்கள் நான்கு மனம், சித்தம், புத்தி அகங்காரம் ஆகியவை) இந்த அந்தக் கரணங்களைத் தனது கட்டுப்பாட்டில் வைத்திருப்பது. இது எவ்வளவு சிரமம் என்பது எல்லோருக்கும் தெரியும்.

**தமம் :** புறக்கரணங்களை விடுதல்.

புறக்கரணங்கள் ஞான இந்திரியங்கள் என்பது கேட்டல், காணல், முகர்தல், தொடுஉணர்வு, சுவைத்தல் ஆகியவை - கர்மேந்திரியங்கள் ஐந்து - கை, கால், வயிறு, மூக்கு, பிறப்புறுப்பு ஆகியவை.

விடல் என்பது உலக விவகாரங்களை விட்டு ஒதுங்குதல்: மீண்டும் மீண்டும் வராமல் பாதுகாத்துக் கொள்ளுதல்.

சகித்தல் : தனக்கு ஒவ்வாத ஒன்று நடைபெற்றாலும் சினம் கொள்வது ஒதுங்கிப் போதல் - மற்றும் மும்மலமாகிய காமக் குரோதம், லோபம் பற்றாதவாறு பார்த்துக் கொள்ளல். மனதில் தோன்றும் போதே அறுத்து விடல்.

சமாதானம் : குரு மகானிடம் கேள்வி ஞானத்தால் பெற்ற கருத்துக்களைத் தத்துவப் பொருள்களை மயக்கம் அற, ஐயம் திரிபு அறச் சிந்தித்தல் சமாதானம் ஆகும்.
சிரத்தை தனது குருவின் வார்த்தைகளை சாட்சாத்து ஈசுவரன் வார்த்தைகளாகக் கருதி மனதில் பதித்து செயல்படுதல் ஆகிய ஆறும் சமாதி சட்சம்பத்து எனப்டும் (சமாதி : நிர்விகற்ப தியானம் நிலை பெறக்கூடிய வழிமுறைச் செல்வங்கள் கூட்டம் என்றும் பொருள்)

நான்காவது தகுதி : முமூட்சுத்வம் பரம்பொருளோடு ஐக்கியம் ஆகவேண்டும் இறைவனைச் சேரவேண்டும் என்றும் தீராத வேட்கை முமூட்சுத்துவம் எனப்படும். இதனை ஆடையில் தீப்பற்றிக கொண்டவன் எவ்வளவு வேகமாக நீரை நோக்கி ஓடுவானோ அது போலப் பரம்பொருளை உணர நாட்டம் வேண்டும். ஒரு வேடனின் வலையில் தன்னுயிரைக் காத்துக் கொள்ள ஓடுமோ அந்த வேட்கையே முமூட்சுத்வம் எனப்படும்.

இந்த நான்கு சாதனங்களும் ஆன்மீகம் பயிலும் மாணவர்க்கு இறைப்பொருளுடன் ஐக்கிய உணர்வு பெற இன்றியமையாதன.

*ஆசிர்வாதங்கள்*
*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## மீனவரின் இறைவணக்கப் பாடல்

தமிழாகரர் தெ. முருகசாமி

(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

தத்துவக் கோட்பாட்டில் மேலை நாட்டார்க்கும் கீழைநாட்டார்க்கும் வேறுபாடுண்டு, அவற்றுள் வினைக் கோட்பாட்டுச் சிந்தனையும் ஒன்று.

மேலை நாட்டார் நடப்பியலை மட்டுமே நம்புபவர்கள், ஆனால் கீழைநாட்டார் பிறப்பின் முன் பின்னான வாழ்வியல் உணர்வை நம்புபவர்கள்.

அதனால் தான் இன்று சுவையான நாளாக இருக்கும் போது இறந்துபோன நேற்றையும் இன்னும் பிறக்காத நாளையும் பற்றிச் சிந்திப்பானேன்? – என்பது மேலையர் கருத்தாக உள்ளது.

DEAD YESTERDAY
UN BORN TOMORROW
WHY FELT ABOUT THEM?
IF TODAY IS TO BE SWEET!

இதற்கு நேர்மாறானது கீழ்நாட்டுணர்வு. நேற்று இன்று நாளை என்ற முக்கால உணர்வுடன் வாழ்க்கை பயணிப்பதைப் பிராரத்துவம், ஆகாமியம், சஞ்சிதமாக உணரும் அனுபவத்தால் விதிக்கோட்பாடு அழுத்தமாக வரையறுக்கப்பட்டது.

அந்த ஒட்டுறவானதை அவரவரும் உணர்ந்தாலும் பிறர் வாழ்வின் மூலமும் உணரலாம் என்பதற்கான ஓர் அடையாளத்தைக் காப்பியக் கவிஞர் நா.மீனவரின் கவித்துவத்தால் சுட்ட விழைகிறது இக்கட்டுரை.

நாடு போற்றும் நகரத்தார் ஆதீனமாகத் திகழும் கோவிலூர் ஆதீனத் திருமடத்தின் சார்பில் திங்கள் தோறும் வெளிவரும் திருநெல்லை என்ற தெய்வத் தமிழ் இதழில் தொடர்ந்து இறைவணக்கம் என்ற தலைப்பில் மீனவர் எழுதி வருகிறார்கள். அந்தத் தொடர்ச்சியில் இந்த ஏவிளம்பி கார்த்திகை மாதத் திருநெல்லையின் இறை வணக்கப் பாடலால் மீனவரின் கவித்துவம் - அவரின் பூர்வஜென்ம மூத்தோர் தொடர்பாலும் பெற்றோர். அவருக்கிட்டு மகிழ்ந்த மீனாட்சி சுந்தரம்

என்ற பெயராலும் ஓர் இயைபு உள்ளதை அன்னாருடன் தமிழ் பயின்ற என்னால் உணர முடிகிறது.

மீனவரின் மூதாதையர் நல்ல ஆன்மீகக் கவித்துவக் கவிஞர்கள், அவர்கள் கவிதை வாசனை (தொடர்பு) மீனவரிடம் தொடர்கிறது.

அவரின் பெயரை உச்சரிக்கும் போது திரிகிரபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களின் பெயர்தான் முந்துகிறது. அந்தத் தொடர்பிற்கான அடையாளம் - திருவாவடுதுறை ஆதீனத்தில் மகாவித்துவான் பெயரில் அமைந்த விருது அளிப்பால் மீனவர், நற்றமிழ் நாவலர் எனும் பட்டம் பெறப்பட்டார்.

இந்த வினைத் தொடர்ச்சியின் முகிழ்ப்பில் மகாவித்துவானின் வாக்கு வளம் போல் அமைந்தது தான் கீழ்வரும் இறைவணக்கப் பாடல்.

*மின்னிடையாள் கார்குழலாள் புவனம் காக்கும்*
*மேகவண்ணன் தங்கையென வந்தாள் மங்கை,*
*மேனைக்கு மகளானாள் கயிலை வாசன்*
*தன்னுடைய மேனியிலே பாதி கொண்டாள்*
*தாமரையாள் கலைமாது பணிய நின்றாள்,*
*தமிழ்பாடும் பிள்ளைக்குப் பால்கொ டுத்தாள்*
*மன்னவனும் சந்ததிக்காய்ச் செய்த வேள்வி*
*மகளானாள் மாமதுரை நகரை ஆண்டாள்,*
*மாகயிலை ஈசனுடன் வாது செய்தே*
*அன்னவனைத் தன்னுடைய பதியாய் ஏற்றாள்,*
*அவள்தானே திருநெல்லை நாமம் பூண்டாள்*
*அவளடியை வணங்கியவர் அமைதி காண்பார்!*

இப்பாடல் ஓரடிக்கு 12 சீர் கொண்ட கழிநெடிலடி ஆசிரிய விருத்தப்பா வானாலும் எண்சீர் விருத்தப்பாவின் கொழிப்பில் மலர்ந்த புதுப்பா! இதில் ஓசை நயம் ஒண்டமிழ்ப் பொருள் ஒய்யாரம் ஒருசேர அமைந்துள்ளன.

பாடலைப் பொருள் அடிப்படையில் இரு பிரிவாகக் கூறலாம். மின்னிடையாள் கார்குழலாள் புவனம் காக்கும் என்பது தொடங்கித் தாமரையாள் கலைமாது பணிய நின்றாள் என்பது வரை - ஒரு பிரிவு.

தமிழ்பாடும் பிள்ளைக்குப் பால்கொடுத்தாள் என்பது முதல் அவளடியை வணங்கியவர் அமைதி காண்பார் என்பதுவரை மற்றொரு பிரிவு.

முதற்பிரிவில் கயிலையின் தொடர்பாக நடந்தவை சுட்டப்பட்டன. மற்றொரு பிரிவில் மண்ணுலக நிகழ்வுகள் சுட்டப்பட்டுள்ளன.

இவற்றுள் இரண்டாம் பிரிவில் சுட்டிய இரண்டு கருத்துக்கள் சிந்தனைக்கு விருந்தாக உள்ளன. தமிழ்பாடும் பிள்ளைக்குப் பால்கொடுத்தாள் என்றது சரியா? பார்வதி தேவி பால் கொடுத்த பிறகே சம்பந்தர் தேவாரத்தமிழ் பாடினார். ஆனால் மீனவரோ தமிழ் பாடிக்கொண்டிருக்கும் போதேபால் கொடுத்ததாகத் தமிழ்பாடும் பிள்ளைக்கு என நிகழ்காலத்தால் பாடியது வரலாற்று முரண் போல் உள்ளதன்றோ?

இப்படிச் சிந்திக்கச் செய்யுமாறு மீனவர் பாடியதால் அவரின் கவித்துவம் மகாவித்துவான் பாடும் சாயலில் பாடப்பட்டதாக உணரப் படுகிறது.

மேலே சொன்ன கதை முரணுக்கு இலக்கணமே பிரமாணமாக உள்ளது எனலாம். நிகழ்காலம் போலப் பாடும் எனக் கூறப்பட்டாலும் அது எதிர்காலச் சொல். பால்கொடுத்ததற்குப் பிறகு தமிழ்பாடப் போகும் பிள்ளைக்கு என்பதாக எதிர் காலத்தை நோக்கிப் பிரயோகித்த சொல் தான் பாடும் என்பதாகும்.

இதற்கான இலக்கண அமைதியைத் தொல்காப்பியர் கூறுவதிலிருந்து உணர வேண்டும். காலம் பற்றிய உணர்வில் வினை எச்சம், பெயரெச்சம் எனஅமைந்தாலும் பொருட்கூறு அடிப்படையில் சில எச்சங்கள் பற்றித் தொல்காப்பியர் விவரிக்கையில் 1. சொற்கள் காலமயக்கத்தால் பொருள் உணர்த்துவதும் 2. முன்பின்னாகச் சொல் விடுபடுவதால் பொருள் உணர்த்துவதும் உண்டு எனச் சொல்லதிகார எச்ச இயலில் கூறுகிறார்.

எதிர்காலச் சொல்லோடு இறந்த காலச்சொல் அமையும் போது, கூழ்குடிப்பான் சோறுண்டான் என்ற எடுத்துக் காட்டில் கூழைக்

குடிக்கும் முன் சோறு சாப்பிட்டான் என்பது சோறுசாப்பிட்ட பின் கூழ் குடிக்கப் போகிறான் எனக் கருதப்படுதல் போலத் தமிழ் பாடப்போகும் சம்பந்தருக்குப் பால் கொடுத்தாள் என்பதாக இலக்கணப் பொருத்தத்துடன் கருத்தை உணர வேண்டும்.

அவ்வாறே உயர்திணை என்மனார் மக்கட்சுட்டே என்ற தொடரில் உயர்திணை என்று சொன்னவர் யார் என்பதாக உணரும் போது ஆசிரியர் என்ற சொல்லை முன்னால் சேர்த்து ஆசிரியர் உயர்திணை என்மனார் என்பதான தெளிவைப் பெறுதல் போல ஈண்டுத் தமிழ்பாடும் என்ற சொல் முன் இனித் தமிழ்பாடும் என்பதாகப் பொருள் உணர வைப்பதால் இனி என்ற சொல் விடுபட்டதாகக் கூறுதற்குச் சொல் எச்சம் என்று கூறப்படும்.

ஆக, பொருள் மயக்கமோ முரணோ உள்ளது போல் பாடப்பட்டதற்கு இலக்கணவழிப் பொருள் உணர வைத்தல் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்றவர்க்கே உள்ளதன் கவித்துவம் – காப்பியக் கவிஞரிடமும் பதிந்துள்ளது அன்னை திருநெல்லையின் திருவருளாகும்,

அடுத்து, பாடலில் கவிஞர் மீனவர், கூறும் மாகயிலை ஈசனுடன் வாது செய்தே அன்னவனைத் தன்னுடைய பதியாய் ஏற்றாள் என்ற கருத்தில் மகா வித்துவானின் சாயல் உள்ளதையும் உணரமுடிகிறது.

பாடலின் முற்பகுதியில் பார்வதியானவள் சிவனை மணங் கொண்டு இடப்பாகம் பெற்றதைச் சுட்டிய கவிஞர் இரண்டாம் பகுதியில் ஈசனுடன் மாகயிலையில் வாதுசெய்தே அன்னவனைத் தன்னுடைய பதியாய் ஏற்றாள் என்றது முன்னுக்குப்பின் முரணாக உள்ள தன்றோ?

மணந்து கொண்ட மகிழ்ச்சியில் பார்வதிக்கு வாது செய்ய வேண்டிய தேவை வந்தது எப்படி? அதுவும் கயிலையில் நடந்ததாகக் கூறினாலும் நடந்த காரியத்தின் பலன் இந்தப் பூலோகத்திற்குக் கிடைத்தது; அதுவும் செட்டிநாட்டுக் கோவிலூருக்குக் கிடைத்ததாம் எனக் கவிஞர் கவித்துவத்தோடு நினை வூட்டுகிறார் என்பது தான் புதுமை!

சிவபெருமானுடன் பார்வதிக்கு வாதுசெய்ய வேண்டிய தேவை எதனால் வந்ததெனில் கயிலையில் சிவபெருமானுக்கு ஓய்வே இல்லையாம்! எனவே இது பொழுது ஓய்வுக்காகப் பூலோகத்தைத் தேர்ந்தெடுத்துக் கோவிலூர் வந்தாராம்.

வாழ்வதோ கயிலைம்மலை; பார்வதியை மணந்து கொண்டதோ இமயமலை; இருந்து அருள் பாலிப்பது வெள்ளிமலை, போருக்குச் சென்று எதிரிகளைச் சாய்க்க ஆயுதமாக எடுக்கும் வில்லோ மேருமலை, இப்படி மலைமலையாய் இருப்பதெல்லாம் இவனுக்கு ஓர் அலுப்பை உண்டாக்கிவிட்டதால் மலையாமல் அதாவது அலைமோதித் திரியாமல் ஓய்வாக இருக்கக் கோயிலூர் வந்தார் சிவபெருமான். வரும்போது பார்வதியை விட்டுவர இருந்த நிலையில் தான் அவள் வாதிட்டு உடன்வர விரும்பினாள்.

அப்படி உடன் வந்தவள் மீண்டும் கணவனைக் கயிலைக்குப் போக விடாமல் கோவிலூரிலேயே தங்க வைத்து விட்டாளாம். அதற்கான காரணத்தைத்தான் கவிஞர் மீனவனார் அன்னவனைத் தன்னுடைய பதியாய் ஏற்றாள் என்ற தொடர் மூலம் நுட்பமாக உணர்த்தினார். முன்பு பாதியாய்க் கொண்டவள் பதியாய் ஏற்றாள் என்றது நயமான சொல்லாட்சி.

கோவிலூர்ப் புராணத்தில் மகாவித்துவான், சிவபெருமான் கோவிலூருக்கு வந்ததைக் கூறும் போது மலைகளாகவே சஞ்சரிக்கும் இவன் பூலோகத்தில் வந்தால் தங்குவதற்கு ஒரு கோவில் வீடு வேண்டும் என்பதாகக் கோவிலூரரை அமைத்துக்கொண்டார் என்ற அளவோடு கற்பனையை நிறைவு செய்தார்.

ஆனால் மகாவித்துவான் விட்ட இடத்திலிருந்து கற்பனையை விரிக்கையில் மீனவர், தன்னுடைய பதியாய் ஏற்றாள் என்பதாகக் கூறியதில்தான் கவித்துவம் பொருள் கொழித்துச் செழிக்கிறது எனலாம்.

கோவிலூருக்குச் சிவனுடன் வந்த பிராட்டி அவ்வூரின் ஓர் அந்தணக் குடும்பத்து நெல் வயலைத்தானே அக்குடும்பத்தின் மகளாகப் போய்க் காக்கின்றாள். இதனால் நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லோர்க்கும் பெய்யும் மழையாக அன்னை பார்வதி அங்குள்ள எல்லா நெல்வயல்களையும் திருக்கண் பார்வையால்

காத்ததால் அந்தக் கோவிலூர் பூமி, கழனிவாசல் ஆனது. நெல்லைக் காத்ததால் திருநெல் நகரானது. நெல்காத்த அம்மை என்பதால் திருநெல்லை யானாள். எனவே அவள் பெயராகக் கோவிலூர் புகழப்பட்டதால் பூலோகக் குடிபடைகளைக் காக்கும் பொறுப்பில் திருநெல்லைத் தாயாய்த் தங்கிவிட்டதால், கோவிலூர், கவிஞர் மீனவனார் கூற்றில் உள்ளது போல் தன்னுடைய பதியாயிற்று. பதி என்றது இடம் என்ற பொருள்படும்.

கொற்றவாளீசனாம் அன்னவனைத் தனது பதியாய் ஏற்றாள் என்பது கணவனாய் ஏற்றுக் கொண்ட பழமையைக் குறித்தாலும் பார்வதி தனக்குத் திருநெல்லை எனப்புதுப் பெயர் அமையக் காரணமாக இருந்த கோவிலூராம் பூலோகத்தை விட்டுப்போக முடியாதபடிக் கணவரையும் இங்கேயே இருக்கும்படிச் செய்து விட்டதன் கருத்தையே மிகச் சொற் செட்டுகளோடு உணர்த்தினார் மீனவர்.

இக்கருத்தை உணரப் பாடலின் மகுடமான சூத்திரம் எது என்றால் பாடலில் சிவனது தேவிக்குப் பார்வதி என்பதாகக் கயிலையின் பெயரைச் சுட்டாமல் திருநெல்லை என்ற தீந்தமிழ்த் தெய்வப் பெயரைப் பூலோகக் கயிலாயமாக உணரச் செய்யும் வகையில் கோவிலூர்த் திருநெல்லை என்றதுதான் உச்சம்.

அதனால் தான் நாமம் பூண்டாள் எனப்பட்டது. நாம் – என்ற அடிச்சொல் அச்சம் என்ற பொருள் தருவதாகத் தொல்காப்பியம் கூறும். அந்த அச்சம் உலகியல் அச்சம், வினைஅச்சம் ஆகியவற்றைத் தீர்த்து வைப்பதால் நாமம் என்ற சொல்லைக் கவிஞர் கூறினார். எனவே பாடலின் அடிக்கரும்பான சுவை திருநெல்லை என்ற நாமமே (பெயரே) மந்திரச் சொல் என்பதாகும்!

என்னே! மீனவரின் இறைவணக்கப் பாடலின் இன்பச் சுவைகள்!



## பக்தி இலக்கியத்தில் தேவாரம்

(முனைவர் அ.மீனாட்சி,
நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்)

### முன்னுரை

தனிநாயக அடிகளார் ஆங்கிலம் வணிகத்தின் மொழி, இலத்தீன் சட்டத்தின் மொழி, கிரேக்கம் இசையின் மொழி, ஜெர்மன் தத்துவத்தின் மொழி, பிரெஞ்சு தூதின் மொழி என்று கூறுவது பொருந்தும் எனில் தமிழைப் பக்தியின் மொழி என்றார். இங்ஙனம் கூறுவதற்கு அடிப்படையாய் அமைந்தது தேவாரம் போன்ற நூல்களே,

*சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் எம் சுந்தரனும்*
*சிற்கோல வாதவூர் தேசிகரும் முற்கோலி*
*வந்திலரேல் நீறெங்கே மாமறை நூலெங்கே*
*எந்தைபிரான் ஐஞ்செழுத்தெங்கே*

என்பது தேவார முதலிகளைச் சிறப்பித்துக் கூறும். தேவாரம் வேதமெனப் போற்றப்படும். அதனாலேயே கோயில் விழாக்காலங்களில் வேதத்துடன் தேவாரம் ஓதுவதும் வழக்கமாய் இருந்து வருகிறது.

### தேவாரம் விளக்கம்

தெய்வத்தின் மீது பாடப்படுவது தேவாரம் ஆகும். இறைவனைப் பண்ணார்ந்த இசையாற் பாடிப்போற்றுவதற்கேற்ப அமைந்தவை. ஆதலின் தேவாரம் எனப் பெயர் பெற்றது. தேவாரம் என்ற சொல் வழிபாடு என்னும் பொருளிலும் வழங்கப்படுவதாயிற்று என்பது புலனாகும்.

1. தேவாரம் – தேவனிடத்து வாரத்தை விளைவிப்பது அதாவது சிவபிரானிடத்து அன்பை உண்டுபண்ணுவது.
2. சிவபிரானுக்கு இன்பம் விளைவிப்பது.
3. தே + ஆரம் சிவபிரானை ஆரம்போல அலங்கரிப்பது.
4. தே + ஆரம் தெய்வத்தன்மை பொருந்திய மாலை.
5. தே + வாரம் தெய்வத்தன்மை பொருந்திய வாரமாயுள்ளது.
6. தே + வாரம் சிவபெருமானுக்கே உரிமையுடையது.

**தேவாரத்தின் சிறப்பு**

கவிதை என்பது இசை போன்று கேட்கத் தகுந்த பெற்றியுடையது ஆகும். செவிகட்குத்தக்க விருந்தளிப்பதாக அஃது இருத்தல் வேண்டும். தேவாரம் சிறந்த தமிழ்ச் சொற்களால் இயற்றப்பட்டதுடன் பண்கலந்து நயம் செறிந்து தாள அறுதிக்கேற்ப அமைந்த சிறப்புடையது ஆகும்.

**இலக்கிய வளர்ச்சி**

தேவாரம் மனிதர்களின் காதலாக இருந்த நிலையில் இருந்து மாறி தெய்வத்தின் மீது கொண்ட காதலைப் பாடும் பாட்டாக அமைந்துள்ளது. அரசர்களின் வீரச் செயல்களைப் பாடும் நிலைமாறி கடவுளின் அற்புத விளையாட்டுகளைப் பாடும் நிலை வளர்ந்ததை உணரலாம். வள்ளல்களின் கொடையைப் பாடும் பாடல்களுக்கு ஈடாக கடவுளின் அருட்செயல்களைப் பாடும் பாடல்கள் வளர்ந்ததைத் தெளியலாம். ஆனால் தேவாரப் பாடல்கள் கல்லாதோரும் செவிவழியாகக் கேட்டுப் பாடும் பல்வகையில் அமைக்கப்பட்டுள்ளமை விளங்குகிறது.

மன்னர்களையும் வள்ளல்களையும் பாடப் பயன்பட்ட தமிழ் இறைவனைப் பாடுவதற்கு மட்டுமே பயன்பட வேண்டும் என்ற கொள்கை வளர்ந்தது.

**இலக்கியச்சுவை**

தேவாரப் பாசுரங்கள் பக்திச் சுவையுடன் இலக்கியநயம், இசைத் தன்மையும் நிரம்பியவை. இலக்கியச் சுவையை விரும்பும் நபருக்கு ஏற்ற பல நயங்களை உள்ளடக்கியது. விருத்தப்பா அமைப்பிலும், உணர்ச்சி வசப்பட்டுப்பாடும் மனங்களிலும் சாதாரண மக்கள் பயிலும் அழகான தமிழ்ச் சொற்களையும் காணலாம். வேதாகமபுராணங்கள், இதிகாசங்கள் ஆகியவைகளில் உள்ள கருத்துக்கள் எடுத்தாளப்படுவதால் இலக்கிய வரலாற்று ஆய்வாளருக்கு அது உதவுகிறது. தேவாரத்தைப் படிப்போர் அப்பாடல்களில் துறவறம் படிக்கப்படாமலும் இல்லறம் வெறுக்கப்படாமலும் அதே நேரத்தில் யாக்கை நிலையாமையை உணர்த்தும் தன்மையதாகவும் இருப்பதை உணரலாம். கலைகள்

போற்றப்படுகின்றன. இந்த உலக இன்பங்களை நுகர்ந்தவாறே இறைவனிடத்தில் பக்தி செலுத்துதலைப் படிப்பவர்களுக்குத் தெளிவாகத்தருகிறது. தேவாரப் பாடல்கள் உலக வாழ்வைக் கண்டு அஞ்சும் அச்சம் நீங்கி, மக்கள் கூடி வழிபாடு செய்து பக்தியுணர்வில் திளைத்திருக்க ஊக்கம் ஊட்டுகிறது.

**முன்னைநூற்புலமை**

முன்னைநூற்புலமை முடிபு ஒருங்கொத்து என்பதனைத் தேவாரத்திலும் காணலாம். சங்கப் பாடல்களின் தாக்கத்தையும், துறையையும் நாம் தேவாரத்தில் காணலாம் என்பதற்கு முன்னை அவனுடைய நாமம் கேட்டாள் என்ற திருநாவுக்கரசர் பாடல் சான்றாகும். திருவள்ளுவர் கூற்றான,

*மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்*
*பழித்த தொழித்து விடின்*

என்பதை நிறுவுவதுபோல் உலகியல் வாழ்க்கையை நடத்திச் சமயப் பாதை மூலம் ஈசனின் திருவடிகளை அடைய முடியும் என்பதை நாம் உணரமுடியும்.

**இயற்கைப் புனைவு**

இலக்கியங்கள் இயற்கையில் முகிழ்த்தது. ஆகையால் இலக்கியங்களில் இயற்கைப்புனைவு காணப்படும். தேவாரத்திலும் இயற்கைப் புனைவுகள் உள்ளன. காட்டின் தன்மையைக் காட்டும் போது

*தேங்கொள் பூங்கமுகு தெங்கிளங்கோடிமாச்*
*செண்பகம் வண்பலா இலுப்பை*
*வேங்கைப்பூ மகிழா வெயிற்புகாவீழி*
*மிழலையான் என வினைகெடுமே*

என்கிறது. திருஞானசம்பந்தர் பாடல்களில் இயற்கைப்புனைவுகள் மிக்கிருப்பதைக் காணலாம். அதற்கு வரைசேரும் முகில் முழவ என்ற பாடல் சான்றாகும். மேலும் திருஞானசம்பந்தருடைய ஒவ்வொரு பதிகத்திலும் முதல் ஏழு திருப்பாடல்களில் அவ்வப்பகுதிகளுக்குரிய தலங்களின் இயற்கை வனப்பையும் எழில் நலங்களையும் எடுத்தாண்டுள்ளார். சுந்தரர் பாடல்களில் உள்ள இயற்கைக்

காட்சிகளை ஒருங்குபடுத்தி மகிழும் தன்மையைக் காணலாம். இதற்கு அரும்பருகே சுரும்பருவ என்ற பாடல் சான்றாகும்.

**பண்**

பாடலுக்குப் பண் இன்றியமையாததை வள்ளுவர் பண்ணென்னாம் என்ற திருக்குறளில் விளக்குகிறார். தேவாரப் பதிகங்கள் இசைத் தமிழாயும் அவ்விசைகள் தமிழுக்குரிய பண்களாயும் அமைந்திருத்தல் தனிச்சிறப்பாகும். தேவாரத்தின் மூலம் பண்டைய நாதகேசி, குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி இருந்த தக்கராகம், பழந்தக்கராகம் என்ற பல்வகைப் பண்கள் இருந்ததை அறியலாம். இறைவன் ஏழிசையாய் இசைப்பயனாய் உள்ளவர் என்றார் சுந்தரர். நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தர் போற்றப் பெற்றார். தமிழோடு இசைபாடல் மறந்தறியேன் என்று திருநாவுக்கரசர் கூறியுள்ளார். தேவாரம் பழம்பெருமை வாய்ந்த பக்திப் பாடலாக இருப்பதோடு மட்டும் அல்லாது 1300 ஆண்டுகளுக்கு முன்னிருந்த நாட்டில் இசை மரபுகளைக் காத்து வரும் பழைய இசைச் செல்வமாகவும் இருந்து வருகிறது.

**இறைமைக் கருத்துக்கள்**

சமய மறுமலர்ச்சிக் காலத்தில் தோன்றிய நூலாகையால் தேவாரத்தில் இறைமைக் கருத்துக்கள் நடமிடுவதைக் காணலாம். தேவாரம் இறைவனை அகத்திலும், புறத்திலும் வழிபடும் வழிபாட்டு முறையை வலியுறுத்தும். இறைவனது திருவருளில் நம்பிக்கையும், உறுதிப்பாடும் வைத்துவிட்டால் அஞ்சுவது யாதொன்றும் இல்லை. அஞ்சவருவதும் இல்லை. நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம் எனவும் அறைகூவும் துணிவையும், ஆற்றலையும் தோற்றும் எனத் தேவாரப் பாடல்கள் காட்டுகின்றன. திருஞானசம்பந்தர் பாடல்களில் வழிபாட்டுமுறை பற்றி அறிந்து கொள்ளலாம். சமுதாய வழக்காறுகள் பற்றியும் அறிந்து கொள்ளலாம். பலவகையான தெய்வத் திருத்தலங்களையும், அவை பற்றிய கருத்துக்களையும் அறியலாம்.

இறைவன் ஒருநாமம் ஒருருவம் இல்லாதவன் எனினும் அவன் திருநாமங்கள் பலவற்றையும் கூறிப் போற்றல் மரபு. இதனைச் சுந்தரர்

*ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம்*
*திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டோமோ*

என்றார். இறைவன் மூவா முதல்வன், ஆதியும் அந்தமும் இல்லாத அருட்பெருஞ்சோதி என்பார் அருளாளர்கள். இதனையே சுந்தரர் மூப்பதும் இல்லை பிறப்பதும் இல்லை, இறப்பதில்லை பிறவாய் இறவாய் பேணாய் மூவாய் என்கிறார். இறைவனே அறிதற்கரியவன் என அருளாளர்கள் குறிப்பிடும் இடத்திலெல்லாம் அவன் எளிமையையும் புலப்படுத்திக் கூறுவர். இறைவன் அளவிறந்த கருணையுடையவன். உயிர்களைத் திருத்தி ஈடேற்றுவதே அவன் செயலாகும் எனச் சுந்தரர் தமது பாடல்களில் கூறுகிறார்.

**சித்தாந்தம்**

இறையுணர்வு, பக்தி, சித்தாந்தம் இவை ஒன்றோடொன்று தொடர்புடையவை. உலகில் இன்பம் தரும் புறப்பொருள்களைவிட இறைவனின் திருவடி அதிக இன்பம் தரும் என்பதை மாசில் வீணையும் மாலை மதியமும் என்ற பாடலால் அறியலாம். வைசித்தாந்த பதி, பசு, பாசத்திற்குத் தேவாரம் இலக்கியமாய் உள்ளது.

மறுபிறப்பு என்பதையும் ஓரறிவு முதல் ஆறறிவு வரை உயிர்கள் உள்ளன என்ற அறிவியல் கருத்தையும், புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா என்ற பாடலில் காணலாம்.

இத்தகு பேரின்பம் வழிவழியாக வற்புறுத்தப்பெற்று வந்துள்ளது. அருளாளர் அனைவரும் ஒருமுகமாக உணர்த்தினர். இறைவழிபாடு, நல்லொழுக்கம் தலைநிற்றல் ஆகியவற்றால் வல்வினை மெல்வினையாக அமையும். பலவினை வருவினை இவற்றை இடையறாத இறையுணர்வால் போக்கிவிட முடியும். இதனைச் சுந்தரர் குற்றொருவரைக் கூறைக்கொண்டு என்ற பாடலில் கூறுகிறார்.

**உவமை**

ஓர் இலக்கியத்திற்கு அழகு தருவது உவமைநயமாகும். தேவாரம் உவமை நலமும், தத்துவ நலமும் நிறைந்து கற்பார் நெஞ்சில் களிபேருவகையை நிறைக்கின்றது. நகைச்சுவையும், பக்திச்சுவையும் ஒருங்கிணைந்த பாடல்களும் உள்ளன. சான்றாக வாரமாகித்

திருவடிக்குப் பணிசெய் தொண்டர் என்ற பாடலாகும். ஆண்டவன் முன் அனைவரும் சமம் என்ற ஒப்பற்ற நிலையை உவமையால் விளக்குகிறார். பொன்னும் மின்னும் எரியும் ஆகவே சடாமகுடத்தைச் சாற்றுவார் என்பார் சம்பந்தர். கவிதையின் பேரழகுகளுள் இயற்கை கரந்த கற்பனைகள். உள்ளது புனைதல், இல்லது புனைதல் என இருவகைப்படும். சான்றாக: திருவேட்டக்குடி என்னும் ஊரில் அலைகள் எறிகின்றன. அக்கடல் அலைகளில் பவளத்தை வாரி வீசுகின்றன. அவை அங்குறையும் சிவபெருமானின் திருவடிகளை வழிபடுவதற்கென்றே அவ்வாறு நீரும் பவளமுமாக எறிந்தன என சம்பந்தர் காபாலிகனைக் கழல்கள் கொண்டிரைத்து என்ற பாடலில் கூறுகின்றார். சிறந்த கவிதையில் உண்மை விளங்கும்.

### பிறசெய்திகள்

வேயுறு தோளி பங்கன் என்ற பாடல் மூலம் தேவாரம் வானியல் கருத்துகளைக் கூறுகிறது. தனிமனிதனைத் தேசமாக்கவும், திருக்கோயிலைத் தேசமாக்கவும் முடியும் என்று காட்டி இரண்டும் தம்மைத் தேசமாக உயர்த்தும் போது உலகப் பொதுமைச் சமயம் உண்டாகும் என அமைத்துக் காட்டினார். இதுபோன்ற பல செய்திகளை நாம் ஆங்காங்கே காணலாம்.

### முடிவுரை

இறைவனின் திருவடிகளைச் சேர்ந்து இயற்கைப் பேரின்பத்தில் திளைத்து நிற்றல் வேண்டும் என்பதே தேவாரத்தின் சாரமாகும். தேவாரம் தமிழ் மரபு கெடாது சிவமனம் கமழ்ந்து நிற்பதைக் கற்பவர் உணரலாம்.



## அடியார் பெருமை

டி.ஆர்.குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர்
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி

உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம் என்பதை மனதில் தாங்கி உள்ளத்தைக் கோயில் ஆக்கி இறைவனை வைத்து நாள்தோறும் இறைவனைத் தொழுது இறைபணி செய்து வரும் அன்பர்கள் அடியார்கள் ஆவர். இறைவனின் புகழினைப் பிறர் உணரும் வண்ணம் பாட்டுக்களாக எழுதிப் பாடவும் செய்வர். சேக்கிழார் இயற்றியுள்ள திருத்தொண்டர் புராணம் அடியார்களின் பெருமைகளை விளக்குகின்றது. ஆலயங்களை நிர்மாணிக்கின்ற அரசரை விட உள்ளத்தில் இறைவனுக்குக் கோயில் அமைக்கும் அடியார்களுக்கு இறையருள் கிட்டுவதில் சிறப்பிடம் உண்டு. அடியார்கள் இறைபணியோடு மக்கள் பணியும் ஆற்றுவர்.

*நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
*மறைமொழி காட்டி விடும்*

எனத் திருவள்ளுவர் தெரிவிக்கிறார்.

நிறைமொழி மாந்தர் என்பதை இறைவனது அடியார்களாக எடுத்துக் கொள்ளலாம். மறைமொழி என்பது அடியார்கள் இறைவனைப் பற்றி எழுதுகின்ற பேசுகின்ற இறைவனது அருளாற்றலைக் குறிக்கும்; அடியார்களின் மறைமொழிகள், அடியார்களின் பெருமையினை இந்த உலகத்திற்குக் காட்டும்.

அடியார்களால் ஊர்நலம் பெருகும், மக்கள் பயனடைவர் என்பதனைத் திருமூலர் சுட்டிக்காட்டுகின்றார்.

*திகைக்கு உரியான் ஒருதேவனை நாடும்*
*வகைக்கு உரியான் ஒருவாதி இருக்கின்*
*பகைக்கு உரியார்இல்லைப் பார்மழை பெய்யும்*
*அகக்குறை கேடுஇல்லை அவ்வுல குக்கே*

*திருமந்திரம் 1868*

எட்டுத் திசைகளிலும் வீற்றிருக்கும் இறைவனை நாடி, இறைவனுக்கு உரிய அடியாராக ஒருவர் இருப்பின், இறைவனது அடியார் வாழும் பகுதியில் பகைவர் இருக்கமாட்டார்கள். வானம்

போதிய மழையைத் தரும். யாருக்கும் எவ்விதக் கேடும் இருக்காது. துன்பம் இருக்காது. எவ்வகை அகக்குறையும் நாட்டிற்கு ஏற்படாது. உலகத்தவர் இன்பமாய் வாழ்வர். அடியார்களால் உலகம் இன்பமுறும் எனத் திருமூலர் எடுத்துரைக்கின்றார். அடியார்கள் வாழ்வியல் நெறிகளை இறையுணர்வுடன் மக்களுக்குச் சொல்லி, நல்வழி காட்டுகின்றார்கள். மக்களின் வாழ்வு நல்வழியில் அமையும் போது உலகம் இன்பமுறும்.

இறையருள் பெற்ற அடியார்களுக்கு எந்தத் தீவினையும் தாக்காது. இறையருள் அரண் போல் அமைந்து அடியார்களைக் காக்கும். மக்கள் பணி செய்யும் அடியார்களை அவ்வினைகள் நெருங்குவதில்லை; இறையருள் அடியார்களைத் துன்பங்களிலிருந்தும் சோதனைகளிலிருந்தும் மீட்கும்.

*மாசில் வீணையும் மாலை மதியமும்*
*வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்*
*மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே*
*ஈசன் எந்தை இணையடி நீழலே*

இறைவனது திருவடிகள் தாம் துன்பங்களிலிருந்தும் விடுபட உதவியதன் சிறப்பினை இப்பாடலில் திருநாவுக்கரசர் விளக்கியுள்ளார். சமணர்களால் துன்பப்பட்டு, சுண்ணாம்புக் காளவாயில் அடைத்துத் துன்புறுத்தப்பட்ட போது, இறைவனது திருவடிகள் தம்மைக் காத்ததன் பெருமையினைத் திருநாவுக்கரசர் விளக்குகிறார்.

*அல்லல் என்செயும் அருவினை என்செயும்*
*தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்*
*தில்லை மாநகர்ச் சிற்றம் பலவணார்க்கு*
*எல்லை இல்லாதோர் அடிமைபூண் டேனுக்கே*

அல்லல், அருவினை (தீவினை), தொல்லைகள் வல்வினைகள் தொந்தரவுகள் இவையெல்லாம் சிற்றம்பலவாணனின் அடியார்களுக்கு எவ்வித சிரமங்களையும் கொடுத்துவிட முடியாது எனத் தேவாரப் பாடல் உணர்த்துகின்றது. இறையருள் அடியார்களுக்குக் கவசமாகும்.

*செய்யனே திருஆலவாய் மேவிய*
*ஐயனே அஞ்சல் என்றருள் செய்யெனைப்*

*பொய்யராம் அமணர் கொளு வுஞ்சுடர்*
*பையவே சென்று பாண்டியற்கு ஆகவே.*

எனத் திருஞானசம்பந்தர் இறைவனிடம் வேண்டுகின்றார். திருஞானசம்பந்தர் தங்கியிருந்த மடம் தீவைக்கப்பட்ட போது, அத்தீயிலிருந்து இறையருள் திருஞானசம்பந்தரைக் காத்தது. பயத்திலிருந்து அடியார்களை இறையருள் காக்கிறது.

சிவனடியார்களின் பெருமைகளைக் கீழ்க்காணும் பாடல்களில் திருமந்திரம் சுட்டிக் காட்டுகின்றது

*இயங்கும் உலகினில் ஈசன் அடியார்*
*மயங்கா வழிசெல்வர் வானுலகு ஆள்வார்*
*புயங்களும் என்திசை போதுபா தானம்*
*மயங்காப் பகிரண்டம் மாமுடி தானே*

*திருமந்திரம் 1873*

*சிவயோகி ஞானி செறிந்த அத்தேசம்*
*அவயோக மின்றி அறிவோண் டாகும்*
*நவயோகம் கைகூடு நல்லியல் காணும்*
*பவயோக மின்றிப் பரலோக மாமே*

*திருமந்திரம் 1882*

*அங்கார் பசியு மவாவும் வெகுளியும்*
*தங்கார் சிவனடி யார்சரீ ரத்திடைப்*
*பொங்கார் புவனத்துப் புண்ணிய லோகத்தும்*
*தங்கார் சிவனைத் தலைப்படு வாரே*

*திருமந்திரம் 1890*

*அழிதகவு இல்லா அரனடி யாரைத்*
*தொழுதகை ஞாலத்துத் தூங்குஇருள் நீங்கும்*
*பழுது படாவண்ணம் பண்பனை நாடித்*
*தொழுது எழவையகத்து ஓர்இன்பம் ஆமே*

*திருமந்திரம் 1864*

*ஆறிடும் வேள்வி அருமறை நூலவர்*
*கூறிடும் அந்தணர் கோடிபேர் உண்பதில்*
*நீறிடும் தொண்டர் நினைவின் பயனிலை*
*பேறெனில் ஓர்பிடி பேறது ஆகுமே.*

தொடர்ந்து இயங்கும் இந்த உலகினில் ஈசனின் அடியார்கள் நல்வழியில் செல்வர். மயக்கும் வழி அதாவது அல்வழியில் செல்லார். சிவஞானம் தரும் உலகினை ஆளும் சிறப்பினையும் ஈசனது அடியார்கள் பெறுவர். வானுலகினை ஆளக்கூடிய அமர பதவியும் பெறுவர். சிவனடியார் தோள்கள் திசை எட்டும் அளக்கும்; எண்திசையும் நடப்பதை அறிந்திருப்பர். அவர்களது திருவடிகள் பாதாளத்திற்கே செல்லும் அவர்களது திருவடிகள் பர அண்டத்தைத் தொடுமளவிற்கு உயர்ந்திருக்கும். ஈசன் அடியார்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவராவர்.

அடியார்கள் (சிவயோகிகள்) வாழ்கின்ற நாட்டில் தீங்குகளுக்கு வழிஇல்லை. சிவயோகிகள் ஞானிகளாகக் கருதப்படுகின்றார்கள். நன்மைகளே ஏற்படும். நல்லயோகம் உண்டு. அவயோகம் அறவே இல்லை. நல் அறிவு செறிந்த சான்றோர்கள் தோன்றுவார்கள். நவயோகம் சேரும். அனைத்து இயற்கை வளங்களும் மக்களுக்குக் கிடைக்கும் மேலோங்கிய நல்லகுணங்களும் சிந்தனைகளும் மக்களிடம் காணப்படும். மக்கள் பிறவித்துயர் இல்லாது பேரின்ப வாழ்வு பெறுவர். ஞானிகள் வாழ்கின்ற நாடு நல்லதொரு நாடாக இருக்கும்.

நெருப்பு போன்ற கொடிய பசி. ஆசைகள், கோபம் ஆகியன அடியார்களிடத்தில் இல்லை. சரீர சுகத்தில் பொங்கித் தங்கியிருக்கமாட்டார்கள் இப்பூமியிலோ புண்ணிய லோகத்திலோ தொடர்ந்து தங்கியிருக்கமாட்டார்கள். புவனமும் புண்ணிய லோகமும் அடியார்களுக்கு ஒன்றே. வேறுபாடில்லை சிவசிந்தனையில் எந்நாளும் தலைப்பட்டிருப்பார்கள். சிவசிந்தனையில் திளைப்பவர்களுக்கு உடல்சார்ந்த உள்ளம் சார்ந்த உபாதைகள் இல்லை. அடியார்கள் அனுசரிக்கும் சிவநெறி வாழ்வியல் நெறியாகும்.

அழிவில்லாத ஒளிஉடம்பு உடைய அடியார்களைத் தொழுது வணங்க வேண்டும் அவ்வாறு வணங்கின் உலக மக்களின் அறியாமை, அஞ்ஞானம் என்னும் இருள் நீக்கும். மெய்ஞானம் கிட்டும் மக்கள் இறைவனைத் தொழுகின்ற போது வையகமே இன்பமடைகின்றது. மக்கள் பிறவித்துயரிலிருந்து மீள்கிறார்கள்.

வேத ஆகம விதிப்படி வேதங்களைச் சொல்லும் மறைநூல் பல படித்து முப்புரி நூலணிந்த அந்தணர் கோடிப்பேருக்கு உணவிடுவதால் கிட்டும் புண்ணியம், ஒரு அடியார்க்கு உணவிட வேண்டும் என்று நினைத்த மாத்திரத்தில் கிட்டும் புண்ணியத்தின் அளவை விடக் குறைவாகும் எனத் திருமூலர் அடியார்களின் பெருமையை உணர்த்துகிறார். நேசிக்கும் ஈசனடியார் மேலானவராகத் திருமந்திரம் காட்டுகின்றது.

திருஞானசம்பந்தர் தமது கோளறு திருப்பதிகத்திலே அடியார்களின் சிறப்புகளையும் அடியார்கள் பெறுகின்ற இறையருளின் மாண்பினையும், அடியார்களத் தீவினைகள் அண்டாது என்பதையும் தெளிவாக விளக்குகின்றார்.

*ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி*
*சனி பாம்பிரண்டு முடனே*
*ஆசறு நல்லநல்ல அவை நல்ல நல்ல*
*அடியார வர்க்கு மிகவே*

*ஒன்பதொ டொன்றோடேழு பதினெட் டொடாறு*
*முடனாய நாள்க ளவைதாம்*
*அன்போடு நல்லநல்ல அவை நல்ல நல்ல*
*அடியா ரவர்க்கு மிகவே*

*திருமகள் கலையதூர்தி செயமாது பூமி*
*திசை தெய்வ மான பலவும்*
*அருநெறி நல்ல நல்ல அவைநல்ல நல்ல*
*அடியா ரவர்க்கு மிகவே*

*கொதியுறு காலனங்கி நமனொடு தூதர்*
*கொடுநோய் ளான பலவும்*
*அதிகுண நல்ல நல்ல அவைநல்ல நல்ல*
*அடியா ரவர்க்கு மிகவே*

*வெஞ்சின அவுணரோடு முருமிடியு மின்னு*
*மிகையான பூத மவையும்*

*அஞ்சிடும் நல்லநல்ல அவைநல்ல நல்ல*
*அடியா ரவர்க்கு மிகவே*

*வெப்பொடு குளிரும்வாத மிகையான பித்தும்*
*வினையான வந்து நலியா*
*அப்படி நல்ல அவைநல்ல நல்ல*
*அடியா ரவர்க்கு மிகவே*

*மலர்மிசை யோனுமாலும் மறையோடு தேவர்*
*வருகால மான பலவும்*
*அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல*
*அடியா ரவர்க்கு மிகவே*

*தானுறு கோளுநாளு மடியாரை வந்து*
*நலியாத வண்ண முரைசெய்*
*ஆனசொல் மாலையோது மடியார்கள் வானில்*
*அரசாள்வ ராணை நமதே*

*சகமலாது அடிமையில்லை தானலால் துணையுமில்லை*
*நகமெலாம் தேயக்கையால் நாள்மலர் தொழுதுதூவி*
*முகமெலாம் கண்ணீர்மல்க முன்பணிந்து ஏத்தும் தொண்டர்*
*அகமலால் கோயில் இல்லை ஐயன் ஐயாறனார்க்கே*

என, திருநாவுக்கரசர் அடியாரின் பெருமையினை விவரிக்கின்றார். உலகாளும் இறைவனே துணையென்று முகமெலாம் கண்ணீர் மல்க, கசிந்து உருகி நிற்கும் தொண்டனின் மனமே இறைவனுக்குக் கோயில் ஆகும்.

இத்தகு கோயிலில் உள்ளத்தில் இறைவன் புகுந்து குடிகொண்டிருப்பான்.

நவக்கிரகங்களால், நவகோள்களால், அவற்றின் இடத்தைப் பொறுத்து, பெயர்ச்சியைப் பொறுத்து நலங்களும் சங்கடங்களும் அமையலாம் என்பது மக்களின் எண்ணமாகும். ஆனால், அடியார்களுக்கு ஒன்பது கோள்களால் எவ்விதத் தீங்கும் ஏற்படாது எனத் திருஞானசம்பந்தர் தெளிவுபடுத்துகின்றார். இறையருள் இக்கோளறு திருப்பதிகத்தைத் தொடர்ந்து படித்து இறைவனைத்

தொழுது வருவோர்க்கு சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது ஆகிய ஒன்பது கோள்களினால் நல்லவையே விளையும்.

இருபத்து ஏழு நட்சத்திரங்களில், ஒன்பதாவதாக இருப்பது ஆயில்யம் ஒன்பதோடு ஒன்று பத்தாவது நட்சத்திரம் மகம், ஒன்பதோடு ஏழு பதினாறாவது நட்சத்திரம்-விசாகம், பதினெட்டாவது நட்சத்திரம் - கேட்டை, ஆறாவது திருவாதிரை ஆகிய நட்சத்திரம், உள்ள நாட்களில் பயணம் மேற்கொள்ளாதிருக்க வேண்டும் என்பது மக்கள் மனதில் இருப்பதுண்டு. ஆனால் இறைவனை உள்ளத்தில் கொண்டிருக்கும் அடியார்கள் இந்த ஐந்து நட்சத்திர நாட்களில் பயணம் மேற்கொண்டாலும் எவ்வித இடர்களும் இல்லை.

திருமகள், கலைமகள், மலைமகள் மற்றும் பூமி திசையெங்கும் அருள் பாலித்துக் கொண்டிருக்கின்ற அனைத்துத் தெய்வங்களும் அடியார்கட்குச் செல்வங்களை வழங்கி நல்லனவே செய்வர் எனத் திருஞானசம்பந்தர் தெளிவுபடுத்துகிறார்.

கொதித்து எழுகின்ற காலன், நெருப்பு, எமன், எமதூதர்கள், கொடிய நோய்கள் ஆகிய பற்பல தீய அம்சங்கள் தீயவை செய்யாது, நற்குணத்தில் மேலோங்கி, அடியார்கட்கு நல்லனவே செய்யும் நல் அம்சங்களாகும். இறைவனை உள்ளத்தில் தாங்கி நிற்கும் அடியார்களுக்கு எமபயம் நீங்கும். கொடிய நோய்கள் அணுகாது.

கொடிய அசுரர்களின் தொல்லை இராது; பயத்தைக் கொடுக்கும் ஒலி எழுப்புகின்ற இடி, மின்னல் மற்றும் ஐந்து பூதங்களினால் சிவனடியார்கட்கு இடர்கள் இல்லை. அவையெல்லாம் சிவனடியார்களிடம் அஞ்சி நிற்கும்.

வெப்பம், குளிர், வாதம், பித்து இவைகளால் மனித உடலுக்குத் தீங்கு ஏற்படுகின்றது. இந்த நான்கைச் சார்ந்து தான் மனித உடலுக்கு நோய்கள் வருகின்றன. இறையன்பு கொண்ட அடியார்களுக்கு அந்த நான்கினால் எவ்விதமான நோய்களும் அண்டாது. அடியார்கள் உடல் நலிவின்றி வாழ்வார். சிவனடியார்கட்கு தாமரை மலர் மீது அமர்ந்திருக்கும் பிரம்மாவின் அருளும் திருமாலின் அருளும், மறையோதும் தேவர்களின் அருளும் கிட்டும். அலைகள் தவழ்கின்ற

கடலும், உயர்ந்துள்ள மலைகளும் அடியார்களுக்கு நல்லனவே செய்யும். அந்த அளவிற்கு அடியார்கள் பெருமை மிக்கவர்கள்.

இறைவனை நினைத்து, உளம் உருகிக் கசிந்து திருஞானசம்பந்தர் அருளிச் செய்த கோளறு திருப்பதிகத்தை அனைவரும் ஓத வேண்டும் கோள்களினால் அடியார்களுக்கு எவ்வித இடரும் வரக்கூடாது அவர்கள் நலியக்கூடாது என்பதைக் கருத்தில் கொண்டு இப்பதிகம் அருளப்பட்டுள்ளது. இப்பதிகத்தைத் தொடர்ந்து ஓதுபவர்கள் சிவகதி பெற்று விண்ணிலும் அரசாள்வர் என்பது உறுதி எனத் திருஞானசம்பந்தர் உறுதிப்படுத்துகின்றார்.

இறைவன் அடியார் முன் தோன்றிடின் தீமைகள் அகலும். நன்மைகள் பெருகும் இறைவனை ஒருகால் நினைக்கின் இருகாலும் காண முடியும். திருவடி அருள் பெறலாம். இறையருளின் சிறப்பினை முருகப் பெருமானின் அருள் பெற்ற அருணகிரி நாதர், தமது கந்தர் அலங்காரத்தில் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

*நாளென் செயும் வினைதான் என்செயும் எனை நாடிவந்த*
*கோளென் செயும் கொடுங்கூற்று என்செயும் குமரேசர்இரு*
*தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும்*
*தோளும் கடம்பும் எனக்குமுன்னே வந்து தோன்றிடினே*

அடியார்களுக்குச் செய்கின்ற தர்மமும் தானமும், பணிவிடைகளும் இறைவனைச் சென்று சேரும். இறைவனுக்குச் செய்ததாகும் என சிவனடியார் பெருமையைத் திருமுலர் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

*படமாடக் கோயில் பரமற்கு ஒன்றுஈயில்*
*நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்குஆகா*
*நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்றுஈயின்*
*படமாடக் கோயில் பரமற்கு அதுஆமே*

*திருமந்திரம் 1857*

*மாத்திரை ஒன்றினில் மன்னிஅமர்ந்து உறை*
*ஆத்தனுக்கு ஈந்த அரும்பொரு ளானது*
*மூர்த்திகள் மூவர்க்கும் மூவேழ் குரவர்க்கும்*
*தீர்த்தம்அது ஆம்ஆது தேர்ந்து கொள்வீரே*

*திருமந்திரம் 1859*

*நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு*
*எல்லார்க்கும் பெய்யும் மழை*

என்கிற தொடருக்கு ஏற்ப நல்ல குணங்களோடு வாழ்வியல் நெறிகளோடு வாழும் இறையருள் பெற்ற அடியார்களை நல்லார் எனலாம். அந்த நல்லார் வாழ்கின்ற இடங்களில் எல்லாம் அவர் பொருட்டு நல்ல மழை பொழியும்; நீர்நிலை பெருகும். நீர்வளம் உயரும். உழவுத் தொழில் உயரும்; உழவுத் தொழில் உயர அனைத்துத் தொழில்களும் உயரும். வையத்துள் வாழ்வாங்கு வாழ்வோர் உயரட்டும்; வையகம் செழிக்கட்டும்.

*சிவாய நம*

*திருச்சிற்றம்பலம்*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## யானை எய்தது

விக்கிரமப் பாண்டியன் புவி முழுவதும் தன் புகழ் பரவும்படிக்கு நல்லாட்சி செய்து வந்தான். வேதசிவாகம நெறியைக் கடைப்பிடித்துச் செங்கோல் செலுத்தி வந்தான். புத்தம், சமணம் ஆன புறச்சமயங்களை ஒழித்தெறிந்தான். பக்தி நெறி எங்கும் தழைத் தோங்கியது. திருக்கோவில் எடுப்பித்துச் சித்த மூர்த்திகளின் திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தான்.

வீரபாண்டியனது பெருஞ் சிறப்பையும் வீர மரபையும் கண்ட சூரியகுலச் சோழனானவன் பொறாமைப்பட்டான். சமண மதத்தைச் சார்ந்திருந்ததினாலே சைவ மதத்தைச் சார்ந்த விக்கிரம பாண்டியனைப் பகைத்தான். பலமுறை நேரிலே எதிர்த்துப் போராடியும் சோழவேந்தன் தோல்வியே கண்டு ஓடினான். ஆதலால், சூழ்ச்சி செய்து பாண்டியனைக் கொல்லத் துணிந்தான். எண்ணியது செய்யத் துணிந்து சோழன் அஞ்சனம் ஆகிய எட்டு மலைக் குகைகளில் வாழ்ந்த சமண குரவர்கள் எட்டாயிரம் பேர்களுக்கும் ஓலை எழுதி அனுப்பினான். ஓலையைப் பெற்றதும் சமணர்கள் அனைவரும் சோழனைக் காணக் காஞ்சிமாநகரத்தை நோக்கி வேகமாக வந்து சேர்ந்தனர். சோழவேந்தன் அந்த முனிவர்களைப் பார்த்து வசியம் முதலிய அறுதொழிலில் வல்லவர்களே ! நீங்கள் அபிசார ஹோமம்

செய்து விக்கிரம பாண்டியனைக் கொல்லவேண்டும்; அப்படிச் செய்தால் எனது இராச்சியத்தில் பாதியை உங்களுக்குக் கொடுப்பேன், என்று சொன்னான்.

சமண முனிவர்களும் சோழனது விருப்பத்திற்கு உடன்பட்டனர். பாலி என்ற ஆற்றின் கரையிலே மூன்று காதம் பரப்புக்கொண்ட பெரிய யாகசாலைனய அமைத்தார்கள். அந்த நிலத்திற்கு நடுவிலே ஒரு யோசனை சதுரத்திற்கு நிலத்தைத் தோண்டினார்கள். அதற்கு நடுவிலே அஷ்டகோணமான ஹோமகுண்டம் ஒன்றை அமைத்தனர். அகோரமான முறையிலே அபிசாரம் நெய்ய ஆரம்பித்தனர். குண்டத்திலே எட்டியைப்போல் விஷக் கட்டைகளை இட்டுத் தீ வளர்த்தனர். வேம்பு நெய்யுடன் விஷஜந்துக்களின் கொழுப்பினையும் தசையையும் கலந்து ஆகுதி செய்தனர். கொடிய நச்சு வேள்வி கோரமாக நடைபெற்றது. விஷ யாகத்தை விஷமிகள் செய்தனர்.

யாகத்தின் விளைவாகப் பெரிய கரிய யானை ஒன்று எழுந்து வெளிவந்தது. நீல நிறமான மலையொன்றே புறப்பட்டது போலிருந்தது. யானையின் தோற்றமும் அளவும் மிகுந்த பயத்தைத் தந்தன. அந்தக் கொல் யானையைப் பார்த்துச் சமணர்கள், நீ வேகமாகச் சென்று விக்கிரம பாண்டியனையும் அவனது மதுரை ஊரையும் அழித்து விடுவாய் என்று கூறித் தெற்குத்திக்கை நோக்கி அது போகும்படிக்கு ஏவினார்கள். யானை இடிமுழக்கம் செய்து, நிலம் அதிர விரைந்து மதுரை நோக்கிப் பறப்பட்டது. யானையுடன் கூடவே சோழனது சைனியங்களும், சமணர்களும் சென்றனர்.

மதுரைமாநகரம் நோக்கி மாபெரும் யானையொன்று கடுகி வருவது தெரிந்த மாந்தர் மன்னன் விக்கிரமனிடம் சென்று சேதிசொல்லினர். மனம் கலங்கிய பாண்டியன் திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானைப் பலமுறை வணங்கி, பெருமானே ! யானையைக் கொன்று அடியேனைக் காத்தருளவேண்டும் என்று விண்ணப்பம் செய்தான். பாண்டிய ! யாம்வில்லேந்திய வீரனாக வருவோம் கொடிய யானையைக் கொல்வோம் நகருக்குப் பக்கத்திலே கிழக்குத் திசையில் அட்டாலை மண்டபம் ஒன்று அமைத்திடுக என்று ஆகாயத்திலிருந்து திருக்குரல் எழுந்தது. அதைக் கேட்ட பாண்டியன் வணங்கினான். விரைந்து சென்றான். பதினாறு தூண்கள் தாங்கிய

அட்டாலை மண்டபத்தையும் அமையச் செய்தான்.

சோமசுந்தரப் பெருமான் வில்வீரனைப்போல வெளிப்பட்டார். அவரது குடுமியிலே மயில் தோகை சொருகியிருந்தது. சிவப்பு நிறமான கச்சை இடுப்பிலே இலங்கியது. பக்கத்திலே உடைவாள் விளங்கியது. முதுகிலே அம்புறைத்தூணி இருந்தது. தோளிலே நீண்ட வில் இருந்தது. கருப்பு நிறத்தோடு, யௌவனக் காமனைப்போல அழகுகொண்டு கம்பீரமாக மண்ட பத்தின் மேலே நின்றார். அபிசார ஹோம யானையின் வருகை எதிர்பார்த்திருந்தார். கூப்பிடு தூரங்கள் ஐந்திலே அந்த யானை வருவதைக் கண்டுவிட்டார் திருவேடர்.

உடனே வில்லிலே அம்பு பொருத்தி வளைத்துவிட்டார் தெய்வவேடர். அவர் பூட்டியது நரசிங்கக்கணை. அம்பு விரைந்து சீறிச்சென்று, மேகம்போல முழங்கிக் கொண்டுவந்த யானையின் மத்தகத்தைக் கிழித்தது. கொடிய கொல்யானை பயங்கரமாகப் பிளிறிக்கொண்டு தரையிலே சாய்ந்தது. யானை இறந்து போனதைக் கண்ட சமணர்கள் பெரும் துன்பத்தில் ஆழ்ந்தனர்.

சாய்ந்து கிடந்த யானை இருள் மலையை ஒத்திருந்தது. அம்புபாய்ந்த இடத்திலிருந்தும், அதன் வாயிலிருந்தும் அருவிபோல் ரத்தம் பெருக்கெடுத்து ஓடியது. யானை இறந்துவிட்டதைக் கண்டவிக்கிரம பாண்டியன் எல்லையற்ற சந்தோஷம் அடைந்தார். ஆனால் சோழனது படையினரையும், அவர்கள் பின்னே பேய்க்கூட்டம் போல வந்துகொண்டிருந்த சமண முனிவர்களையும் கண்டு பொங்கி எழுந்தான். அவர்களை யெல்லாம் பாண்டிய வீரர்கள் சரியான முறையில் தாக்கித் தண்டித்து அனுப்பிவிட்டனர்.

யானையை அம்பெய்து கொன்று அட்டாலை மண்டபத்தில் வில்லேந்திய சேவகனாகி நின்ற சோமசுந்தரப் பெருமானின் இரண்டு திருவடிகளையும் தன் கைகளால் பிடித்துக்கொண்டு வணங்கினான் பாண்டியன். சில வரங்களைப் பெற்றுத் தனது அரண்மனையை அடைந்தான்.

சில நாட்களில் விக்கிரம பாணடடியனுக்கு மகன் ஒருவன் பிறந்தான். தன் அழகுக் குமாரனுக்கு இராஜ சேகரன் என்று பெயரிட்டு மிகவும் செல்வமாக வளர்த்து வந்தான். மிகுந்த பரிவுடன் புவியை ஆண்டு வந்தான்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## தவம்

(ஐம்பொறி வழியாக மனம் போகாமல் நிற்றலாகிய நோன்பு)

1. **உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு.**

உற்றநோய் நோன்றல் - தமக்கு ஏற்படும் பல துன்பங்களையும் பொறுத்துக் கொள்ளுதல்; உயிர்கசு - பிற உயிர்களுக்கு; உறுகண் செய்யாமை - துன்பம் செய்யா திருத்தல்; அற்றே - அளவினது; தவத்திற்கு உரு - தவத்தின் வடிவம்.

தமக்கு ஏற்படும் பலதுன்பங்களையும் பொறுத்துக் கொள்ளுதலும் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாதிருத்தலும் தான் தவத்திற்கு வடிவம் என்னும் அளவினதாகும்.

2. **தவமும் தவம் உடையார்க்கு ஆகும் அவம் அதனை
அஃதுஇலார் மேற்கொள் வது.**

தவமும் - தவம் என்பதும்; தவம் உடையார்க்கு ஆகும் - முன்பு தவம் செய்து பயன் உடையார்க்கே ஆகும்; அஃதிலார் மேற்கொள்வது - முன்தவம் இல்லாதார் மேற்கொள்வது.

முன்பு தவம் செய்தவர்க்கே தவமும் அதன் பயனும் ஆகும்; முன்தவம் இல்லாதார் மேற்கொள்ளும் தவம் பயனற்றதாகும்.

3. **துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்.**

துறந்தார்க்கு - துறவு மேற்கொண்டவர்களுக்கு; துப்புரவு வேண்டி - அவர்கள் பயன்பெற வேண்டி; மறந்தார் கொல் - மறந்து விட்டார்களோ?; மற்றையவர்கள் - துறவு மேற்கொள்ளாது இல்லறம் பேணுபவர்கள்; தவம் - தவத்தினை.

துறவு மேற்கொண்டவர்கள் பயன் பெறுதல் வேண்டி இல்லறத்தார் தவத்தை மேற்கொள்ள மறந்து விட்டார்களோ?

4. **ஒன்னார்த் தெறுதலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்.**

ஒன்னார்த் தெறுதலும் - அறத்திற்குப் பகை கொண்டாரைக் கெடுத்தலும்; உவந்தாரை ஆக்கலும் - அறத்தை மகிழ்வாய் ஏற்றாரை

உயர்த்துவதும்; எண்ணின் - நினைத்தால்; தவத்தான் வரும் - தவத்தின் வலிமையால் நிகழும்.

தவமுடையார் நினைத்தால் அறத்திற்குப் பகை கொண்டாரைக் கெடுத்தலும் அறத்தை மகிழ்வாய் ஏற்றாரை உயர்த்துவதும் அத்தவத்தினால் நிகழும்.

**5. வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்**
**ஈண்டு முயலப் படும்.**

வேண்டிய - தாம் வேண்டுவனவற்றை; வேண்டியாங்கு - விரும்பியபடியே; எய்தலால் - பெறலாம் என்பதால்; செய்தவம் - தவம் செய்வதற்கு; ஈண்டு - இவ்வுலகில், முயலப்படும் - முயற்சி மேற்கொள்ளப்படும்.

தவத்தினால் வேண்டுவனவற்றை விரும்பிய படியே பெறலாம் என்பதால் அத்தவம் செய்ய இவ்வுலகில் முயற்சி மேற்கொள்ளப்படும்.

**6. தவம்செய்வார் தம்கருமம் செய்வார்மற்று அல்லார்**
**அவம் செய்வார் ஆசையுட் பட்டு.**

தவம் செய்வார் - தவம் செய்பவர் எனப்படுபவர்; தம்கருமம் செய்வார் - தம்முடைய கடமைகளை முறையாகச் செய்பவர் ஆவார்; மற்று அல்லார் - தம் கடமை செய்யாதவர்கள்; ஆசையுட்பட்டு - ஆசை வலையில் அகப்பட்டு; அவம் செய்வார் - பயனற்றவற்றைச் செய்வர்.

தவம் செய்பவர்கள் தம்கடமைகளை முறையாகச் செய்பவரே ஆவார். தம் கடமை செய்யாதவர்கள் ஆசை வலையுட்பட்டு பயனற்றவற்றைச் செய்வர்.

**7. சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்**
**சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.**

சுடச்சுடரும் பொன்போல் - தீயினில் இட்டுச் சுட்டால் அது மேன்மேலும் சுடர்விட்டு; ஒளிவிடும் - ஒளிதரும்; துன்பம் - அது போலத் துன்பம் என்பது; சுடச்சுட - வருத்த வருத்த; நோற்கிற் பவர்க்கு - தவம் செய்வார்க்கு;

தீயினில் இட்டுச் சுட்டால் மேலும் ஒளிவிடும் பொன்னைப் போல, தவம் செய்வார்க்கு வரும் துன்பம் வருத்த வருத்த அவர்துன்பம் நீங்கி ஒளி தரும்.

8. தன்உயிர் தான்அறப் பெற்றானை ஏனைய
மன்உயிர் எல்லாம் தொழும்.

தன் உயிர் - தனது உயிரை; தான் அறப் பெற்றானை - தனக்கென்று உரியதாகப் பெற்றவனை; ஏனைய - பிற; மன்னுயிர் எல்லாம் தொழும் - உயிர்கள் எல்லாம் வணங்கும்.

தனது உயிரைப் பிறருக்காகக் கொண்டு தனக்கு என்று உரியதாகப் பெற்றவனைப் பிற உயிர்களெல்லாம் வணங்கும்.

9. கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

கூற்றம் குதித்தலும் - கூற்றத்தைக் (எமனை) கடத்தலும்; கைகூடும் - இயலும்; நோற்றலின் ஆற்றல் - தவமிருந்து பெறும் ஆற்றலை; தலைப்பட்டவர்க்கு - கொண்டவர்களுக்கு.

தவமிருந்து பெறும் ஆற்றலைக் கொண்டவர்களுக்குக் கூற்றத்தைக் கடத்தலும் இயலும்.

10. இலர் பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர் பலர் நோலா தவர்.

இலர் - பொருளில்லார்; பலர் ஆகிய காரணம் - பலராதற்குக் காரணம்; நோற்பார் சிலர் - தவம் செய்வார் சிலர்; பலர் நோலாதவர் - தவம் செய்யாதவர் பலர்.

தவம் செய்பவர் சிலராகவும் செய்யாதவர் பலராகவும் இருப்பதுவே பொருளில்லாதார் பலராக உள்ளதற்குக் காரணம் ஆகும்.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

10.01.2018 அன்று கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்கள் சார்பில் 11ஆவது ஆண்டுப் பொங்கல் கோலப்போட்டி நடைபெற்றது. மழலையர் வகுப்பு முதல் கல்லூரி மாணவர்கள் வரை போட்டிகள் நடைபெற்றன. மடாலய வளாகத்தில் நடைபெற்ற போட்டிகளில் 276 மாணவர்களும், ஆசிரியர், அலுவலர்களும், பொதுமக்களும் பங்கு பெற்றனர். எட்டுப் பிரிவாக நடைபெற்ற இப்போட்டிகளில் ஒவ்வொரு பிரிவிற்கும் 3 பரிசுகளையும் ஆறுதல் பரிசுகளையும் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் வழங்கினார். முத்துராமலிங்க

ஆண்டவர் மழலையர் பள்ளித் தலைமை ஆசிரியை மணிமொழிமுருகன் மற்றும் ஆசிரியைகள் ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். மடாலயக்கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் சே.குமரப்பன், கல்லூரி முதல்வர்கள் மாயாண்டி, டாக்டர் ரவீந்திரன், டாக்டர் செல்லப்பா, பள்ளி முதல்வர் மணிமொழி மோகன் பங்கேற்றனர்.

### *பரிசு பெற்றவர்கள் விபரம்*

| பிரிவு | முதல் பரிசு | இரண்டாம் பரிசு |
|---|---|---|
| KG to III st | S.பிரியதர்சணி ஊ.ஒ. பள்ளி கோவிலூர் | யுவஸ்ரீ கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளி |
| IV & V st | எம். சுபிக்ஷா கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளி | T.அமிர்தவர்சினி முத்துராமலிங்க ஆண்டவர் தொடக்கப்பள்ளி |
| VI to VIII st | S.கீர்த்தனா கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளி | S.மகாலட்சுமி, கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளி |
| IX & X st | M.ஷாலினி கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளி | M.தீபிகா கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளி |
| மடாலய அலுவலர்கள் | A.ஆனந்தி | செல்வராணி |
| ஆசிரியர்கள் | நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி | நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி |
| பொதுமக்கள் | திருமதி. ல.அனிதா | M.கனிமொழி |
| XI & XII | நவின்குமார் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளி | R.மணிகண்டன் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளி |
| கல்லூரி மாணவர்கள் | B.பவித்ரா நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி | S.நர்மதா நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி |

**கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்ககள் சார்பில் சமத்துவப்பொங்கல்**

12.1.2018 அன்று கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்கள் இணைந்து மடாலய வளாகத்தில் பொங்கல் விழாவைக் கொண்டாடின. தமிழர்களின் பாரம்பரிய முறைப்படி தரையில் கோலமிட்டு மண்பானையில் மஞ்சள் கொத்து கோலத்துடன் மடாலயத்தின் சார்பிலும், ஒவ்வொரு கல்வி நிறுவனங்கள் சார்பிலும் தனித்தனியே பானைகள் வைத்து பொங்கல் வைக்கப்பெற்றது. அனைத்து கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள், டாக்டர் செல்லப்பா, டாக்டர் ரவீந்திரன், மாயாண்டி, திருமதி. மணிமொழிமோகன், திருமதி. மணிமொழிமுருகன் முன்னிலையில் அந்தந்தக் கல்வி நிறுவனத்தைச் சார்ந்த ஆசிரியர்கள் அலுவலர்கள் பொங்கல் வைத்தனர்.

பொங்கல் பானைகளிலிருந்து பொங்கல் எடுக்கப்பெற்றுக் கூட்டாக பள்ளயம் போட்டு படையல் செய்து தீபாராதனைகள் காட்டப்பெற்றன. பின்னர் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் காளாஞ்சி பிரசாதம் வழங்கி ஆசிரியர் அலுவலர்களுக்கு ஆசி வழங்கினார். மடலாய அறநிலை உறுப்பினர் தேவகோட்டை ராமநாதன், மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் மற்றும் ஆசிரியர், மாணவர்கள் திரளாகப் பங்குக்பெற்றனர். கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியில் நடைபெற்ற பொங்கல் விழாவில் பிரான்சு நாட்டைச் சார்ந்த சுற்றுலாப் பயணிகள் கலந்து கொண்டனர்.

சாதி, மத, மொழி, இனம் கடந்து நூற்றுக்கணக்கான ஆசிரியர்கள், அலுவலர்கள், மாணவர்கள் இணைந்து நடத்திய சமத்துவப் பொங்கல் மதநல்லிணக்கத்திற்கும், மனித நேயத்திற்கும் சான்றாக விளங்கியது என்பதில் ஐயமில்லை.

23.12.2017 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் பூசலார்நாயனார் மற்றும் நேசநாயனார் பற்றி முனைவர் அ. மீனாட்சி சொற்பொழிவாற்றினார்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் “திருநெல்லை”**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**